உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்






இராமநாதபுரம் மாவட்டம்
சிவகெங்கை தேவஸ்தானம்



# திருப்பூவணம்
## ஸ்ரீ பூவணநாத சுவாமி கோவில்
# வரலாறும் திருமுறையும்.



சிவகெங்கை தேவஸ்தான
வெளியீடு.
1961.

உ

திருச்சிற்றம்பலம்



திருப்பூவணம்

# ஸ்ரீ பூவணநாத சுவாமி கோவில்







இராஜ கோபுரம்.

உ

திருச்சிற்றம்பலம்

## பொருளடக்கம்

---





## திருப்பூவணம்

# ஸ்ரீ பூவணநாத சுவாமி கோவில்

## அமைப்பு

மேல மாட வீதி 327-0




கீழ மாட வீதி

## விபரம்.

1. சுவாமி சந்நிதி கோபுர வாசல்
2. துவஜஸ்தம்ப மண்டபம்
3. ஸ்ரீ நடராஜர் சந்நிதி மண்டபம்
4. நடராஜர் ஆலயம்
5. மஹா மண்டபம்
6. அர்த்த மண்டபமும் கெர்ப்பகிருஹமும்
7. உள் பிரகாரம்
8. முதல் பிரகாரம்
9. இரண்டாம் பிரகாரம்
10. அம்மன் சந்நிதி வாசல்
11. துவஜஸ்தம்ப மண்டபம்
12. மஹா மண்டபம்
13. அர்த்த மண்டபமும் கெர்ப்பகிரஹமும்
14. பள்ளியறை
15. மடப்பள்ளி
16. சந்திர தீர்த்தம்
17. மணிகர்ணிகா தீர்த்தம்
18. லெக்ஷ்மி தீர்த்தம்
19. சூரிய தீர்த்தம்
20. சூரிய விநாயகர்

உ

திருச்சிற்றம்பலம்

# திருப்பூவணம்

# ஸ்ரீ பூவணநாதசாமி கோவில்

## 1. வரலாறு

By

ஸ்ரீ இ. மு. சுப்பிரமணிய பிள்ளை,
சங்கரநயினர் கோவில்.

திருச்சிற்றம்பலம்

மெய் கண்டதேவன் மெல்லடி வாழ்க.

# திருப்பூவணம்

# பூவணநாதசாமி கோவில் வரலாறு.

(காப்பு)

*சீராரும் பூவண்ணச் செல்வர் வரலாற்றைப்*
*பாரார் அறியப் பகர்வதற்குத்—தாராரும்*
*மின்னனையாய் அம்மே மினுமினுக்கும் பொற்பாதம்*
*தன்னைப் பணிய அருள் தா.*

## 1 இட அமைப்பு.

### ஜில்லா, தாலூகா, போக்கு வரவு.

1911ல் புதிதாக ஏற்பட்ட இராமநாதபுரம் ஜில்லாவின் சிவகெங்கைத் தாலூகாவைச் சேர்ந்தது திருப்பூவணம். இது திருப்புவனம் என்றும், திரிபுவனம் எனவும், திருப்பூவனம் என்றும், பலவாறு வழங்கப்பெறுகிறது. தேவார ஆசிரியர்களாகிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர், திருநாவுக்கரசு நாயனர், சுந்தரமூர்த்தி நாயனர் இவர்களாலே பதிகம் பாடப்பெற்ற பெருமையது இந்நகர். திருவிசைப்பா ஆசிரியர் கருவூர்த் தேவராலும் பாடல் பெற்றது. இவர்களெல்லாரும் இந்நகரைத் திருப்பூவணம் என்றே பாடியிருக்கின்றார்கள்.

"பொழில்சூழ் திருப்பூவணம்" என்று திருஞான சம்பந்தரும், "பொழில் திகழும் பூவணம்" என்று திருநாவுக்கரசரும், "பூம்பணைச் சோலை ஆவணவீதிப் பூவணம்" என்று கருவூர்த்தேவரும் "கிளியுளார் பொழிற் பூவணம்" என்று திருவிளையாடலில் பரஞ் சோதியாரும் "திருத்தகும் பொழில் தென்திருப் பூவணம்" எனப் பூவணப் புராண ஆசிரியரும் அருளிய படியால், பூவனம் என்பது பொருந்தாப்பாடமாகவும், பூவணம் என்பதே சரியான பாடமாகவும் கொள்ளு தல் வேண்டும். பெரிய புராண ஆசிரியரும் இதனைப் பல இடங்களிலும் பூவணம் என்றே கூறுகின்றார்—. பூவனம் என்பது பின் புட்பவனமாக்கப் பெற்றிருக் கிறது—.

திருப்பூவணம் மதுரைக்குத் தென்கிழக்கே 12 மைல் தொலைவில் இருக்கிறது—இதிலிருந்து தென் கிழக்கே மானமதுரை 18 கல்லில் உள்ளது–இச்சாலை யின் வழியாக அடிக்கடி பார வண்டிகளும், குதிரை வண்டிகளும், மோட்டார் வண்டிகளும் வாடகைக்கு ஓடுகின்றன. இரயில் வண்டிகளும் இவ்வூர் வழி அடிக்கடி போவதனாலே போக்குவரவுக்கு இது மிக வும் வசதியான ஊர். பெரியசாலையிலிருந்து கோவி லுக்கு ஒரு பர்லாங்கு தூரம் இருக்கும்

### மலை, குன்று, ஆறு, ஏரி.

இவ்வூரை ஒட்டி மலையோ, குன்றோ இல்லை. இது வைகையாற்றின் தென்கரையில் இருக்கிறது.

இவ்வாற்றில் மழைகாலத்திலே தான் வெள்ளம் போகும். மற்ற காலங்களில் ஓடுகாலே தண்ணீர் தருவது. திருப்பூவணம் கண்மாயும், மடைப்புறம் கண்மாயும் மிகப் பெரியவை. ஊரினுள் சிறுசிறு குளங்களும் இருக்கின்றன—.

## வெப்பதட்பம், மக்கள் தொகை, தங்கும் இட வசதி.

இவ்வூர் வெப்பமானது தான். இருந்தாலும் தென்னை மரங்களும், மற்ற மரங்களும் அடர்ந்து நெருங்கிய சோலைகளால் இது சூழப்பெற்றிருத்தலால், கொடிய வெயிலிலும் குளிர்ச்சியாகவே இருக்கும். 1961ல் எடுத்த கணக்குப்படி இவ்வூரிலுள்ள ஆண் 5141 பெண் 5088 ஆக மொத்தம் மக்கள் தொகை 10229.

## பிற சிறப்புக்கள்.

இவ்வூரில் தென்னை, வாழை, வெற்றிலை, நெல் இவை மிகுதியாகப் பலன் தருகின்றன. வெற்றிலை, இலை இவை பல ஊர்களுக்கு ஏற்றுமதியாகின்றன. இங்கே பத்திரப் பதிவு நிலையமும் (Sub Registrar's Office) காவற் சாவடியும் (Police Station) மருத்துவச் சாலையும், ஊராட்சியும் (Panchayat) அஞ்சல் நிலையமும் (Post Office) இருக்கின்றன. செவ்வாய் கிழமை தோறும் சந்தை கூடுகிறது. இங்கே ஓர் உயர்தரப்பள்ளியும், 4ஆண் பெண் ஆரம்ப பள்ளிகளும் உள.

## 2. கோவில்.

### கோவிலின் தோற்றம், அகல நீளம்.

ஆற்றின் வலது கரையிலே கோவில் புனிதமான உளம்கவரும் தோற்றத்துடன் திகழ்கின்றது. இதன் அகலமும் நீளமும் கோவிலின் அமைப்பு விவரப் படத்திற் காண்க.

### பல பகுதிகள், சுற்றுக்கள், மூர்த்திகள்.

கோவில் இரண்டு பகுதிகளாக இருக்கிறது. மேல்புறம் பெருமான் கோவிலும் கீழ்புறம் அம்மை கோவிலும் இருக்கின்றன. முகப்பில் இருப்பது கொடிமர மண்டபம். அதில், நந்தி, பலிபீடம், கொடி மரம் இவை இருக்கின்றன. பெருமான் கோவிற் கருப்பக்கிரகத்தில் பூவணநாதப் பெருமானும் பள்ளி யறைச் சொக்கரும் இருக்கின்றனர். அம்மை கோவிற் கருப்பக்கிரகத்தில் மின்னம்மை எழுந்தருளியுள்ளனர். இரு கோவில்களிலும் கருப்பக்கிரக அர்த்தமண்டபங் களுக்கு அப்பால் மாமண்டபம் இருக்கிறது. இதுவே உட்சுற்று மண்டபமுமாகும். இதில் பெருமான் திருக் கோவிலில்கூத்தப்பெருமான் எழுந்தருளியிருக்கஏற்ற மண்டபம் தெற்கே பார்க்க இருக்கிறது. பெருமான் கோவில் தெற்கு உட்சுற்றில் தெற்கணு மூர்த்தியும்

வடபுறம் சண்டேசரும் அமர்ந்துளர். அம்மை கோவிலிற் பள்ளியறை இருக்கிறது—.

பின் வரும் திருவிழா மூர்த்திகள் இருக்கின்றனர்.— பிள்ளையார், முருகன், வள்ளி, தேவயானை, திருவிழா நாயகர், அம்மன், பொன்னனையாள், பூவண நாயகர் (உபய நாச்சியாருடன்), அம்மன் பாங்கிமாருடன், சங்காளநாதர், அம்மன், மாணிக்கவாசகர், ஞானசம்பந்தர், நந்தி, சந்திரசேகரர் அம்மனுடன், சண்டேசர், சிபலிநாயகரும் அம்மனும், அத்திரதேவர், அம்பாள் சிபலிநாயகர், ஷ அத்திரதேவி, மாரியம்மன், கூத்தர், சிவகாமி, பள்ளியறை அம்மன், பள்ளியறைச் சொக்கர், எல்லி அம்மன், முருகன்.

**தீர்த்தங்கள், தலமரம்.**

சிவலிங்கத்துக்கு அக்கினி திக்கில் சூரியன் தோண்டிய மணிகர்ணிகை தீர்த்தமும், வைகை நதியில் ஓர் அம்பு செல்லும் எல்லைவரையுள்ள பாவநாச தீர்த்தமும், பெருமான் திருமுன்பு ஐந்நூறு விற்கிடையளவுள்ள பிரம தீர்த்தமும், இரண்டம்பு செல்லும் தூரத்தில் வசிட்ட தீர்த்தமும் இருக்கின்றன. இங்கே உமாதேவியார் வளர்த்த பாரிசாத மரமே தலமரம். இதனடியில் பெருமான் முளைத்தெழுந்தார்; உளி படாத திருமேனி. இத்தல விருக்ஷம் பலா என்றும் கூறுவர்.

## 3. சுற்றுக் கோவில்.

சுப்பிரமணியசாமி கோவில் இதன் சுற்றுக் கோவில்.

## 4. சிற்பச் சிறப்புகள்.

### விமானங்கள்.

அரச கோபுரம் சிறியதாகவும் பழமையானதாக வும் இருந்தாலும் கண்டவுடன் பெருமான் நினைவைத் தந்து பத்திப்பெருக்கில் ஆழ்த்துவதாக இருக்கிறது. உள்ளே கருப்பக்கிரகங்களின் மேலுள்ள விமானங் கள் புதியன அழகியன.

### திருவுருவங்கள்.

இங்குள்ள எழுந்திருத்து மூர்த்திகள் யாவும் அழகு வாய்ந்தனவே. இவை தம்முள் மிகப் பேரழகு வாய்ந்தது பூவணநாதப் பெருமான் திருவுருவே. இத் திருவுருச் சமைந்த விவரம் திருவிளையாடற் புராணத் தில் முப்பத்தாறுவது இரசவாதஞ் செய்த படலத் தில் விவரமாகக் கூறப்பெறுகிறது. திருப்பூவணத் திலே பொன்னனையாள் என்னும் கணிகை மாது நாடோறும் தனக்குக் கிடைக்கும் பொருளை யெல் லாம் சிவனடியார்க்கு உணவூட்டுவதிற் செலவிட்டு வந்தாள். அவள் பெருமானுடைய திருவுருவத்தைப் பொன்னாலே சமைக்கவேண்டும் என்று ஆசை கொண்டு மெழுகினாலே கரு அமைத்து வைத்துக் கொண்டு ஏங்கியிருந்தாள். அவள் மதுரை நாயகர் அருள் செய்ய மாட்டாரா என ஏங்கி யிருந்தாள். அதனை அறிந்த அழகிய பெருமான் ஒரு சித்தராகி வந்து இரசவாதத்தால் செம்பு, இரும்பை யெல்லாம்

பொன்னுக்கித் தந்தார். பின் வருவன திருவிளையாடற் புராணம் (பரஞ்சோதியார்) இரசவாதஞ் செய்த படலம் 28, 29:....

" அழலடைந்தபின் இருள்மல வலிதிரிந் தரன்தாள்
நிழலடைந்தவர் காட்சிபோல் நீப்பரும் களங்கம்
கழல ஆடகம் ஆனதால் அதுகொண்டு கனிந்த
மழலை ஈர்ஞ்சொலாள் கண்டனள் வடிவிலான் வடிவம்"

" மழவிடை உடையான்மேனி வனப்பினை நோக்கி அச்சோ
அழகிய பிரானோ என்ன அள்ளிமுத் தம்கொண் டன்பில்
பழகிய பிரானை ஆனப் பரிவினுல் பதிட்டை செய்து
விழவுதேர் நடாத்திச் சின்னுள் கழிந்தபின் வீடு பெற்றுள்.

---

பொன்னனையாள் அவ்விறைவன் கபோலத்தின் கண் அள்ளுதற்கு இட்ட கையிலுள்ள நகக் குறியையும், அவள் கூறிய "அழகிய பிரான்" என்னும் காரணப் பெயரையும் கொண்டு மிக்க விருப்பம் தருதலையுடைய ஒளி வீசும் சிவந்த பொன்னலாகிய திருமேனி இக்காலத்துக்குத் தக்கபடி வேறுபட்டு இப்போதும் தக்க பொருந்திய திருவுருவமாய் நாம் கண்டு திருவருள்பெறுமாறு நிலைபெறுகின்றனன்.

## 5. புராண வரலாறு.

### தலபுராணம்.

திருப்பூவணப் புராணம் என்ற பெயருடன் தல புராணம் ஒன்று இருக்கிறது. அதன் ஆசிரியர் கந்த சாமிப் புலவர் என்பார். அவர் காலம் சாலிவாகன சகாப்தம் 1543. அதனை விளக்கும் பாயிரப்பாடல் பின் வருமாறு:—

“ அருளுடனே தீர்த்தங்கள் ஆடு மாறும்
அருங்கலியின் வலியைநளன் அகற்று மாறும்
திருவிழா அணிபெறச்செய் வித்த வாறும்
சிதம்பரநல் உபதேசம் செய்த வாறும்
தருமுலகில் சகாத்தம்ஆ யிரத்தைஞ் ஞூறு
தங்குநாற் பான்மூன்று தந்த ஆண்டில்
பொருவருநற் புலவோர் சொல் புலமை காட்டப்
புட்பவன புராணம் எனப் புகலல் உற்றேன் ”

அதாவது இற்றைக்கு முந்நூற்றிருபத்திநான்கு ஆண்டுகளாகின்றன இது பாடி.

### புராண வரலாறு.

புராணம் முதலில் நாடு நகரச் சிறப்புக் கூறுகிறது; பின் இருபது சருக்கங்கள் உடையது. அவைகளின் சுருக்கம் வருமாறு:—

மதுரைக்குத் தென் கிழக்கே உமை வளர்த்த பாரிஜாத மரத்தின்கீழ் இலிங்கம் முளைத்தெழுந்தது,

அதனைச் சூரியன் வழிபட்டான். திரஞ்சனன் என்ப வன் இவ்வூரில் முதலில் சிவபெருமானை வ ழி ப ட வேண்டியதிருக்க மு த லி ல் அம்மையை வழிபட்டு அரக்கனாகி நாரதனால் உண்மை தெரிந்து பிரம தீர்த் தத்தில் முழுகிப் பெருமானை வணங்கி அருள் பெற் றான். மணிகர்ணிகைத் தீர்த்தம் அ மு த ம் பெற்ற பெருமையுடையது. து ன் ம ன ன் என்பவன் தன் னோடு அரண்மனையில் தி ரு டி ய தோழருடன் மணி கர்ணிகையில் விழுந்து இறந்ததால் நற்கதி அடைந் தான். தருமஞ்சன் தன் தந்தை எலும்பு மணிகர்ணி கையில் விழுந்து பூவானமை கண்டு வியப்புற்றான். உற்பலாங்கி என்பவளை மணக்கவந்த இருபது பேர் மடிந்தனராக அப்பெண் பூவணம் வந்து தாமரை நீலோற்பலத்தால் அம்மையை வ ழி ப ட் டு நல்ல மணாளனைப் பெற்றாள். தேவர்கள் சூரியமண்டலத்தி லுள்ள சர்ச்சரையைக் கடைந்து செப்பஞ் செய்த போது அப்பொடி பூவணத்தில் விழுந்து எ ங் கு ம் பரந்தமையால் இது பாற்கரபுரம் எனப் பெயர் பெற் றது. இக்கோவிலை வழிபட்டால் பாவங்களெல்லாம் நீங்கும். கைலாசத்தில் நடித்த ஊர்வசியின் உடை நெகிழ அவளை உற்றுநோக்கிய நான்முகன் ச ா ப ம் பெற்று இங்கு வந்து ஒரு தீர்த்தம் உண்டாக்கி மணி குண்டத்துக்கு நிருதிமூலையில் ஆலநிழலில் சிவலிங்கம் ஒன்று நிலைபெறுத்தி, அ ங் கே தவம் செய்திருந்த திருமாலைக் கும்பிட்டு, பெருமானுக்குக் கோ வி ல் கட்டித் திருவிழா நடத்திப் பாவம் தீர்ந்தான். வால

தில்லிய முனிவரை மதியாமல் இகழ்ந்த பாவம் தீர இலக்குமி இங்கு வந்தாள். திருமாலும் இங்கு வந்து கோவிலுக்கு மேற்கே இரண்டம்பு செல்லும் தூரத்தில் ஒரு சிவலிங்கம் நிலைபெறுத்தி ஒரு தீர்த்தமும் ஆக்கினன். உமையாள் தக்கன் மகளாகித் தவம் செய்ய, பெருமான் வந்து காட்சியருளி அவளுக்குத் தாலி கட்டியவுடன் மறைந்தான். பின்பு உமைமுன் தோன்றி அழைத்துச் சென்றான். அதனால் சினம் கொண்ட தக்கன் சிவனை இகழ்ந்து வேள்வி செய்ய, பெருமான் வீரபத்திரனால் வேள்வியை அழித்துத் தக்கன் தலையை வெட்டி ஆட்டுத்தலை தந்தான். கணவனார் அனுமதி பெறாமல் வேள்வி காணச்சென்ற உமையம்மை அக்குற்றம்தீர திருப்பூவணத்தில் வந்து பாரிசாத நிழலில் தவம்செய்து அங்கு முளைத்த பெருமானைப் பூசை செய்தாள். நாரதன் ஏவலால் சுச்சோதி மன்னன் திருப்பூவணம் வந்து பிதிரர்களை நற்கதிபெறச் செய்து கோவிலுக்கு நிருதி திக்கில் தன் தந்தை தேவவன்மாவின் பெயரால் ஒரு சிவலிங்கம் நிலைபெறுத்தினன். இவ்வூர்த் தீர்த்தங்கள் மணிகுண்ட தீர்த்தம், வைகை, வசிட்ட தீர்த்தம், இந்திர தீர்த்தம் முதலியன. நளன் மனைவி மக்களைத் திரும்பக் கண்டு நாடு பெற்றுப் பூவணம் வந்து பூசித்து வைகாசி விழா நடத்தினன். பூவணர் அருளால் தியானகாட்ட முனிவர் சிதம்பரம் சென்று ஆனந்தத் தாண்டவம் கண்டார். பெருமானோடு எதிர்த்து நின்று கூத்தாடிய காளி அக்குற்றம் நீங்க

கோவிலுக்கு வடக்கே காளீசுர லிங்கத்தை நிலை பெறுத்தினாள். இங்கே அலரியின் அடியிலே தங்கிய தவளை சலந்தரன் என்ற மன்னவன் ஆயினன். சலந்தரனை வெல்லத் திருமால் பூசித்துச் சக்கரம் பெற்றான். அழற்பிழம்பின் முடியை நான்முகன் கண்டான் என்று பொய்புகன்ற தாழை இங்கு வந்து பூசித்துப் பாவம் நீங்கிற்று. மார்க்கண்டனார் பால் முழுக்குச் செய்து பெருமானைப் பூசித்தார்.

### திருவிழா, அர்ச்சனை

பங்குனி விழாவே பெருந்திருவிழா.

108 (அட்டோத்திரம்), 308 (திரிசதை), 1008 (சகஸ்ரநாமம்) என்று அருச்சனைகள் முறையே ஓரணா, இரண்டணா, ஆறணாப்பெற்று செய்யப்பெறுகின்றன.

### பிற வரலாறுகள்.

திருஞானசம்பந்தர். அப்பமூர்த்திகள், சுந்தரனார் சேரமான் பெருமாள், இவர்கள் வந்த வரலாறுகள் பெரிய புராணத்தில் கூறப்படுகின்றன. மதுரை நாயகர் இங்கு வந்து இரசவாதம் செய்தது திருவிளையாடற் புராணத்திற் சொல்லப்பெறுகிறது. கருவூர்த் தேவர் இங்கே வந்து திருவிசைப்பாப் பாடியருளினார்.

## 6. வரவு செலவு.

இந்தக் கோவிலுக்குப் பாத்தியமான இனும் கிராமங்கள் ஜமீன் ஒழிப்புச் சட்டப்படி சர்க்காரால் எடுத்துக் கொள்ளப்பட்டு விட்டன. அந்த கிராமங் களிலிருந்து சர்க்காரால் இப்பொழுது வசூலிக்கப் படும் நில வரித்துகையிலிருந்து சர்க்காருக்குச் சேர வேண்டிய துகைகளை நீக்கி பாக்கியை கோவிலுக்கு வருடந்தோறும் மான்யமாக கொடுக்கப்படும். மேலும், இனும் கிராமங்களை சர்க்கார் எடுத்துக் கொண்டுவிட்டதால் ஏற்பட்டிருக்கும் வருமான நஷ்டிக்காக சராசரி வருமானத்தின் அடிப்படையை அனுசரித்து வருடந்தோறும் நஷ்ட ஈடும் கொடுக்க வேண்டியதிருக்கிறது. வருடந்தோறும் கொடுக்க வேண்டிய துகை இன்னும் முடிவாய் நிர்ணயிக்கப் படவில்லை. ஆண்டு ஒன்றுக்கு சராசரி வருமானம் ரூ. 30,000. செலவு ரூ. 29,000 ஆகும்.

## 7. ஆட்சி.

சிவகெங்கை மன்னரவர்கள் இக்கோவிலின் பரம் பரைத் தருமகர்த்தர். சென்னை அறநிலைய பாது காப்புத்துறை ஆணையர் பரிபாலனத்தின்கீழ் இருக் கிறது.

## 8. சரித்திர வரலாறு.

### கல்வெட்டுகள்.

இக்கோவிற் கல்வெட்டுக்கள் 1894ல் எண் 17, 17 அவாக எடுக்கப்பட்டு, தென்னிந்தியக் கல்வெட்

டுக்கள் தொகுதி 5ல் பக்கம் **119, 120**ல் எண் **305, 306** ஆக வெளியிடப் பெற்றுள்ளன. அவை வருமாறு:—

**305** " திரிபுவனச் சக்ரவர்த்தி கோ நேரின்மை கொண்டான் திருப்பூவணத்துத் தண்டல் நாயகம் செய்வார்களுக்கு திருப்பூவணமுடைய நாயனுர் தேவ தானம் திருப்பூவணத்துத் தனிப்பங்கு பாட்டத்துக்கு எட்டாவது தைம்மாதமுதல் ஆண்டொன்றுக்கு வாடாக் கடமையாகத் தண்டல்மேனி நானூற்று ஐம்பது பொன் இறுப்பதாகச் சொல்லி இப்படிக்கு வரியிலார் கணக்காலும் நிறுத்தச் சொன்னேம். இப் படிக்கு இவ்வோலை பிடிபாடாகக்கொண்டு அழகிய பெருமான் திருமுகமும் எழுதிக்கொண்டு திருப்பூ வணமுடையார் கோவிற் கணக்கிலும் தங்களூர்க் கணக்கிலும் நிறுத்திவித்து சந்திராதித்தர் வரைச் செல்லக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள்க. இவை துஞ்சலூருடையான் எழுத்து. இவை சுந்தர பாண்டிய பல்லவராயன் எழுத்து. கலியாண்டு ஒன்ப தாவது நாள் முப்பத்தெட்டு". இது கோவில் முன் மண்டப கிழக்குச் சுவரில் உள்ளது—பின் வருவதும் அவ்விடத்திலே இருப்பது தான்.

எண் **306**

"நம்பிள்ளை பராக்கிரம பாண்டிய தேவர்க்கு யாண்டு ஒன்பதாவது நாள் சிங்கநாயிற்றுப் பூருவ பக்கத்து அட்டமியும் புதன் கிழமையும் பெற்ற அனு

டத்து நாள்...... பங்கு பாட்டத்துக்கு. எட்டாவது தைம்மாதம் முதல் நம்பி தேவர் நங்கைபரிப்பார் கோவணவர் கணக்கர் கன்மிகளுக்கு ஓலைவரக் காட்டு கையில் இதுக்கு இவ்வாண்டுமுதல் வாடாக் கடமை யாக நிறுத்திவித்து மேனியிறுக்கும் பொன் நானூற்று ஐம்பது. இப்பொன் நானூற்றி ஐம்ப தும் ஒன்று முக்காலும் ஒன்று காலுமாக இறுப்பதாக நங்கை பரிப்பார் கோவணவர் கணக்கர் கன்மிகளுக் குச் சொன்னோம். இப்படிக்குக் கல்லிலும் செம்பி லும் வெட்டிக்கொடுப்பது.........இப்படிக்கு இவை சைவாபரண பட்டர் எழுத்து. இப்படிக்கு இவை மதுரைக்கு வாசகவர் ...... எழுத்து அருளாள சுந்தர பிர பாண்டிய பிரமாதராயன் எழுத்து. அருளால் வாழவல்ல பாண்டிய பிரமாத ராயன் எழுத்து. அரு ளால் மாடாபதியம் திருமாலை பெருமாள் எழுத்து. அருளால் கோயிற்கணக்குத் தானவினோதமுவே...... னெழுத்து". கல்வெட்டிலும் இவ்வூர்ப் பெயர் **திருப்பூவணம்** என்றே காணப்பெறுகின்றமை காண்க.

## திருப்பூவணம் பட்டயம்.

இது சரித்திர ஆசிரியர்களால் மிகவும் சிறப்பா கப் புகழப்பெறுகின்றது. இப்பட்டயத்தில் குறிப் பிடப்படும் சடாவர்மன் குலசேகரன் கி. பி. 1090ல் பட்டத்துக்கு வந்தான் என்று கெல்கார்ன் குறிப்பிடு கிறார். "புகழ்பெற்ற திருப்பூவணம் செப்புப் பட்ட யம் ஒன்று அரசனது (குலசேகரன்) 25-வது ஆண்டில்

(1214 நவம்பர் 29உ) பல பழைய ஊர்களை ஒன்று சேர்த்து அரச கெம்பீர சதுர்வேதிமங்கலம் என்ற பெயருடன் அமைக்கப்பெற்றதும் அதன் எல்லைகள் பழைய வழக்கப்படி ஒரு பெண் யானையில் குறிப்பிடப்பட்டதும் குறிப்பிடுகிறது. இதனல் அரசனுக்கு இராச கெம்பீரன் என்ற புனை பெயர் இருந்தமை தெரிகிறது. அவனுடைய பதிவுகள் அக்கால ஆட்சிமுறை, மக்கள் வாழ்க்கை முறைகளைக் கொண்டுள்ளன'' என்று ஆசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் பாண்டியர் ஆட்சி என்ற நூலில் 143-ம் பக்கத்தில் எழுதியுள்ளார்.

### கோவிலின் காலம்.

இங்கு வந்து தேவாரம் பாடியருளிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனுர் காலம் ஏழாம் நூற்றுண்டென்பது முடிவு செய்யப்பெற்றுள்ளது, ஆதலால் இத் திருக்கோவில் அதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே பெருமை பெற்று இருந்தாதல்வேண்டும்.

## 9. இலக்கியம்

பூவணநாதர் உலா என்ற பிரபந்தம் ஒன்று இருக்கிறது. இவ் ஊர் பெரிய புராணத்திலும், திருவிளையாடற் புராணத்திலும் விவரிக்கப்பெற்றுள்ளது. **பெரிய புராணம், திருநாவுக்கரசு நாயனுர் புராணம்** பாடல்கள் 406, 407 பின்வருவன :—

"திருவால வாயமர்ந்த செஞ்சுடரைச் செழும்பொருள்நூல்
தருவானை நேரிசையும் தாண்டகமும் முதலான
பெருவாய்மைத் தமிழ்பாடிப் பேணுதிருப் பணிசெய்து
மருவார்தம் புரமெரித்தார் பூவணத்தை வந்தடைந்தார்.

"கொடிமாடம் நிலவுதிருப் பூவணத்துக் கோயிலினுள்
நெடியானுக் கறிவரியார் நேர்தோன்றக் கண்டிறைஞ்சி
வடிமூன்று திரிசூலத் தாண்டகத்தால் வழுத்திப்போய்ப்
பொடிநீடு திருமேனிப் புனிதர்பதி பிறபணிவார்".

## திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் புராணம்
## 886-ம் பாடல்

" பற்றார்தம் புரங்கள்மலைச் சிலையால் செற்ற
பரமனார் திருப்புத்தூர் பணிந்து போந்து
புற்றரும் பணிபூண்ட புனித னார்தம்
பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்து பாடிக்
கற்றார்கள் தொழுதேத்தும் கானப் பேரும்
கைதொழுது தமிழ்பாடிச் சுழியல் போற்றி
குற்றாலம் குறும்பலாக் கும்பிட் டேத்திக்
கூற்றுதைத்தார் நெல்வேலி குறுகு னாரே".

## கழறிற்றறிவார் நாயனுர் புராணம்
## 97, 98, 99, 100ம் பாடல்கள்.

" அந்நாளில் மதுரைநகர் மருங்கரனார் அமர்பதிகள்
பொன்னாரம் அணிமார்பில் புரவலர்மூ வரும்போதச்
செந்நாவின் முனைப்பாடித் திருநாடர் சென்றிறைஞ்சிச்
சொன்மாலை களும்சாத்தித் தொழத்திருப்பூ வணத்
தணைந்தார்.

" நீடுதிருப் பூவணத்துக் கணித்தாக நேர்செல்ல
மாடுவருந் திருத்தொண்டர் மன்னியஅப் பதிகாட்டத்
தேடுமறைக் கரியாரைத் திருவுடையா ரென்றெடுத்துப்
பாடிசையிற் பூவணமீ தோஎன்று பணிந்தணைவார்.

"சென்றுதிருப் பூவணத்துத் தேவர்பிரான் மகிழ்கோவில்
முன்றில்வலங் கொண்டிறைவர் முன்வீழ்ந்து பணிந்
நின்றுபர விப்பாடி நேர்நீங்கி யுடன்பணிந்த [தெழுந்து
வென்றிமுடி வேந்தருடன் போந்தங்கள் மேவினர்.

" அப்பதியி லமர்ந்திறைஞ்சிச் சிலநாளில் ஆரூரர்
முப்பெருவேந் தர்களொடு முதன்மதுரை நகரெய்தி
மெய்ப்பரிவில் திருவால வாயுடையார் விரைமலர்த்தாள்
எப்பொழுதும் பணிந்தேத்தி இன்புற்றங் கமர்கின்றார்.

---

குறிப்பு :- இக் கோவிலின் திருப்பணி சுமார் 40 வருடங்கட்கு முன் தேவகோட்டை உ. ராம. உ. மு. குடும்பத்தாரால் செய்யப்பெற்று, சர்க்கார் மான்யம், பொது ஜனங்களின் நன்கொடை, கோவில் நிதி இவைகளின் உதவியால் ஜீர்ணோத்தாரணம் செய்யப் பெற்று, பிலவஹ ஆவணிமீ 12உ (28—8—61) மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது.



உ
சிவமயம்.

திருப்பூவணம்

# திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்

[1-ம் திருமுறை]

**பண் தக்கேசி.**

திருச்சிற்றம்பலம்

1. அறையார் புனலு மாமலரு மாடர வார்சடைமேல்
குறையாற் மதியஞ் சூடி மாதோர் கூறுடை யானிடமாம்
முறையால் முடிசேர் தென்னர் சேரர் சோழர்கள் தாம் வணங்கும்
திறையா ரொளிசேர் செம்மை யோங்குந் தென்திருப் பூவணமே.

2. மருவார் மதில்மூன் றொன்ற எய்து மாமலை யான்மடந்தை
ஒருபால் பாக மாகச் செய்த வும்பர் பிரானவனூர்
கருவார் சாலி யாலை மல்கிக் கழன்மன்னர் காத்தளித்த
திருவால் மலிந்த சேடர் வாழுந் தென்திருப் பூவணமே.

3. போரார் மதமா வுரிவை போர்த்துப் பொடியணி மேனியனைக்
காரார் கடலின் நஞ்ச முண்ட கண்ணுதல் விண்ணவனூர்
பாரார் வைகைப் புனல்வாய் பரப்பிப் பன்மணி பொன் கொழித்துச்
சீரார் வாரி சேர நின்ற தென்திருப் பூவணமே.

4. கடியா ரலங்கற் கொன்றை சூடிக் காதிலொர் வார் குழையன்
கொடியார் வெள்ளை யேறு கந்த கோவண வன்னிடமாம்
படியார் கூடி நீடி யோங்கும் பல்புக ழாற்பரவச்
செடியார் வைகை சூழ நின்ற தென்திருப் பூவணமே.

5. கூரார் வாளி சிலையிற் கோத்துக் கொடிமதில் கூட்டழித்த
போரார் வில்லி மெல்லிய லாளோர் பால்மகிழ்ந்
தானிடமாம்
ஆரா அன்பில் தென்னர் சேரர் சோழர்கள்
போற்றிசைப்பத்
தேரார் வீதி மாட நீடுந் தென்திருப் பூவணமே.

6. நன்று தீதென் றொன்றி லாத நான்மறை யோன்கழலே
சென்று பேணி யேத்த நின்ற தேவர் பிரானிடமாம்
குன்றி லொன்றி ஓங்க மல்கு குளிர்பொழில் சூழ்
மலர்மேல்
தென்ற லொன்றி முன்றி லாருந் தென்திருப் பூவணமே.

7. பைவா யரவம் அரையிற் சாத்திப் பாரிடம் போற்றி
சைப்ப
மெய்வாய் மேனி நீறு பூசி ஏறுகந் தானிடமாம்
கைவாழ் வளையார் மைந்த ரோடுங் கலவியி னால்
நெருங்கிச்
செய்வார் தொழிலின் பாட லோவாத் தென்திருப்
பூவணமே.

8. மாட வீதி மன்னி லங்கை மன்னனை மாண்பழித்துக்
கூட வென்றி வாள்கொ டுத்தாள் கொள்கையி னார்க்
கிடமாம்
பாட லோடும் ஆட லோங்கிப் பன்மணி பொன்
கொழித்து
ஓட நீரால் வைகை சூழும் உயர்திருப் பூவணமே.

9. பொய்யா வேத நாவி னானும் பூமகள் காதலனும்
கையால் தொழுது கழல்கள் போற்றக் கனலெரி
யானவனூர்
மையார் பொழிலின் வண்டு பாட வைகை மணி
கொழித்துச்
செய்யார் கமலம் தேன்அ ரும்புந் தென்திருப் பூவணமே.

10. அலையார் புனலை நீத்த வருந்தே சருமன் புசெய்யா
நிலையா வண்ணம் மாயம் வைத்த நின்மலன் தன்னிட
மாம்
மலைபோல் துன்னி வென்றி யோங்கு மாளிகை
சூழ்ந்தயலே
சிலையார் புரிசை பரிசு பண்ணுந் தென்றிருப் பூவணமே.

திண்ணார் புரிசை மாட மோங்குந் தென்றிருப்
பூவணத்துப்
பெண்ணார் மேனி யெம்மி றையைப் பேரியல் இன்
தமிழால்
நண்ணா ருட்கக் காழி மல்கு ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணார் பாடல் பத்தும் வல்லார் பயில்வது
வானிடையே.

திருச்சிற்றம்பலம்

## பண்-காந்தார பஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

1 மாதமர் மேனிய னாகி வண்டொடு
போதமர் பொழிலணி பூவ ணத்துறை
வேதனை விரவலர் அரணம் மூன்றெய்த
நாதனை யடிதொழ நன்மை யாகுமே.

2 வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு
தேனணி பொழிற்றிருப் பூவ ணத்துறை
ஆனநல் லருமறை யங்க மோதிய
ஞானனை யடிதொழ நன்மை யாகுமே.

3 வெந்துய ருறுபிணி வினைகள் தீர்வதோர்
புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை
அந்திவெண் பிறையினோ டாறு சூடிய
நந்தியை யடிதொழ நன்மை யாகுமே.

4 வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்
பூசனைப் பொழில்திகழ் பூவ ணத்துறை
ஈசனை மலர்புனைந் தேத்து வார்வினை
நாசனை யடிதொழ நன்மை யாகுமே.

5 குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை
பொருந்திய பொழில்திருப் பூவ ணத்துறை
அருந்திறல் அவுணர்தம் அரணம் மூன்றெய்த
பெருந்தகை யடிதொழப் பீடை யில்லையே.

6 வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய
பொறியர வணிபொழிற் பூவ ணத்துறை
கிறிபடு முடையினன் கேடில் கொள்கையன்
நறுமலர் அடிதொழ நன்மை யாகுமே.

7 பறைமல்கு முழவொடு பாட லாடலன்
பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை
மறைமல்கு பாடலன் மாதொர் கூறினன்
அறைமல்கு கழல்தொழ அல்லல் இல்லையே.

8 வரைதனை யெடுத்தவல் அரக்கன் நீள்முடி
விரல்தனில் அடர்த்தவன் வெள்ளை நீற்றினன்
பொருபுனல் புடையணி பூவ ணந்தனைப்
பரவிய அடியவர்க் கில்லை பாவமே.

9 நீர்மல்கு மலருறை வானும் மாலுமாய்ச்
சீர்மல்கு திருந்தடி சேர கிற்கிலர்
போர்மல்கு மழுவினன் மேய பூவணம்
ஏர்மல்கு மலர்புனைந் தேத்தல் இன்பமே.

10 மண்டைகொண் டுழிதரு மதியில் தேரரும்
குண்டருங் குணமல பேசுங் கோலத்தர்
வண்டமர் வளர்பொழில் மல்கு பூவணம்
கண்டவர் அடிதொழு தேத்தல் கன்மமே.

11 புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை
அண்ணலை யடிதொழு தந்தண் காழியுள்
நண்ணிய அருமறை ஞான சம்பந்தன்
பண்ணிய தமிழ்சொலப் பறையும் பாவமே.

திருச்சிற்றம்பலம்



# திருநாவுக்கரசு நாயனார்

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

1 வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்
வளர்சடைமே லிளமதியந் தோன்றுந் தோன்றும்,
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றுங்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்,
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில்திகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

2 ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும்
அடியவர்கட் காரமுத மாகித் தோன்றும்,
ஊணாகி யூர் திரிவா னாகித் தோன்றும்
ஒற்றைவெண் பிறைதோன்றும் பற்றார் தம்மேல்
சேணாக வரைவில்லா லெரித்தல் தோன்றும்
செத்தவர்த மெலும்பினாற் செறியச் செய்த,
பூணாணு மரைஞாணும் பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

3 கல்லாலின் நீழற்க லந்து தோன்றுங்
கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று,
சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றுஞ்
சூழரவும் மான்மறியுந் தோன்றுந் தோன்றும்,
அல்லாத காலனைமுன் அடர்த்தல் தோன்றும்
ஐவகையா னினைவார்பா லமர்ந்து தோன்றும்,
பொல்லாத புலாலெலும்பு பூணுய்த் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

4 படைமலிந்த மழுவாளும் மானுந் தோன்றும்
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்,
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும்
நான்மறையின் ஒலிதோன்றும் நயனந் தோன்றும்,
உடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்றும்
ஊரல்வெண் சிரமாலை உலாவித் தோன்றும்,
புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

5 மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்றும்
மாசிலாப் புன்சடைமேல் மதியந் தோன்றும்,
இயல்பாக இடுபிச்சை ஏற்றல் தோன்றும்
இருங்கடல்நஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றும்,
கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை
ஆயிரமா முகத்தினொடு வானில் தோன்றும்,
புயல்பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத் தெம் புனித னார்க்கே.

6 பாராழி வட்டத்தார் பரவி யிட்ட
பன்மலரும் நறும்புகையும் பரந்து தோன்றும்,
சீராழித் தாமரையின் மலர்க ளன்ன
திருந்தியமா நிறத்தசே வடிகள் தோன்றும்,
ஓராழித் தேருடைய இலங்கை வேந்தன்
உடல்துணித்த இடர்பாவங் கெடுப்பித் தன்று,
போராழி முன்ஈந்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே.

7 தன்னடியார்க் கருள்புரிந்த தகவு தோன்றுஞ்
சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்று,
மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும்
வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தல் தோன்றும்,
துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்புந்
தூயமா மதியுடனே வைத்தல் தோன்றும்,
பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத் தெம் புனித னூர்க்கே.

8 செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றுந்
திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்றும்
நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்றும்
நெற்றிமேல் கண்தோன்றும் பெற்றந் தோன்றும்,
மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்றும்
மலைமகளுஞ் சலமகளும் மலிந்து தோன்றும்
பொறியரவும் இளமதியும் பொலிந்து தோன்றும்,
பொழில்திகழும் பூவணத் தெம் புனித னூர்க்கே.

9. அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும்
அணிகிளரும் உருமென்ன அடர்க்குங் கேழல்,
மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்றும்
மணமலிந்த நடந்தோன்றும் மணியார் வைகைத்,
திருக்கோட்டி நின்றதோர் திறமுந் தோன்றுஞ்
செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்,
பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்
பொழில் திகழும் பூவணத் தெம் புனித னார்க்கே.

10 ஆங்கணைந்த சண்டிக்கும் அருளி யன்று
தன்முடிமேல் அலர்மாலை யளித்தல் தோன்றும்,
பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று
பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றுங்
கோங்கணைந்த கூவிளமும் மதமத் தம்முங்
குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும்
பூங்கணைவே ளுருவழித்த பொற்புத் தோன்றும்
பொழிறிகழும் பூவணத் தெம் புனித னார்க்கே.

11 ஆரொருவர் உள்குவார் உள்ளத் துள்ளே
யவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்,
வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை
மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவுந் தோன்றும்
நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை
நெறுநெறென அடர்த்திட்ட நிலையுந் தோன்றும்,
போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

திருச்சிற்றம்பலம்

இத் திருப்பதிகம் அகத்திய முனிவர் திரட்டியருளிய
தேவாரத் திரட்டிற் சேர்ந்த சிறப்புடையது.



# சுந்தரமூர்த்தி நாயனர்

## பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

1 திருவுடை யார்திரு மால்அய னுலும்
அருவுடை யார்உமை யாளைஓர் பாகம்
பரிவுடை யார்அடை வார்வினை தீர்க்கும்
புரிவிடை யார்உறை பூவணம் ஈதோ.

2 எண்ணி இருந்து கிடந்து நடந்தும்
அண்ண லெனுநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்
புண்ணிய னுர்உறை பூவணம் ஈதோ.

3 தெள்ளிய பேய்பல பூதம வற்ருெடு
நள்ளிருள் நட்டம தாடல்ந வின்ருேர்
புள்ளுவ ராகும் அவர்க்கவர் தாமும்
புள்ளுவ னுர்உறை பூவணம் ஈதோ.

4 நிலனுடை மான்மறி கையது தெய்வக்
கனலுடை மாமழு ஏந்தியோர் கையில்
அனலுடை யார் அழ கார்தரு சென்னிப்
புனலுடை யார்உறை பூவணம் ஈதோ.

5 நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்
கடைகடை தோறிடு மின்பலி என்பார்
துடியிடை நன்மட வாளொடு மார்பில்
பொடியணி வார்உறை பூவணம் ஈதோ.

6 மின்னனை யாள்திரு மேனிவி ளங்கவொர்
தன்னமர் பாகம தாகிய சங்கரன்
முன்நினை யார்புரம் மூன்றெரி ஊட்டிய
பொன்னனை யாள்உறை பூவணம் ஈதோ.

7-9 மிக்கிறை யேயவன் துன்மதி யாலிட
நக்கிறை யேவிர லால்இற ஊன்றி
நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்
புக்குறை வான்உறை பூவணம் ஈதோ.

10 சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவணம்
ஆரவி ருப்பிட மாஉறை வான்றனை
ஊரன் உரைத்தசொல் மாலைகள் பத்திவை
பாரில் உரைப்பவர் பாவம் அறுப்பரே.

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பூவணநாதர்; அம்பிகை: மின்னம்மை.

வரலாறு: மதுரையில் சேரமான் பெருமாளோடு தங்கியிருந்த சுந்தரர், சேர சோழ பாண்டியரோடு திருப்பூவணத்தைத் தரிசிக்கச் செல்லுகையில், தொண்டர்கள் அத்தலத்தைச் சுட்டிக்காட்ட, அப்போது பாடியது இப்பதிகம். [பெரியபுராணம் சேரமான் பெருமாள் 98.]

## திருப்பூவணம்

# ஸ்ரீ கருவூர்த் தேவர் திரு இசைப் பா

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

1 திருவருள் புரிந்தா ளாண்டுகொண் டிங்ஙன்
சிறியனுக் கினியது காட்டிப்
பெரிதருள் புரிந்தா னந்தமே தருநின்
பெருமையிற் பெரியதொன் றுளதே
மருதர சிருங்கோங் ககின்மரஞ் சாடி
வரைவளங் கவர்ந்திழி வையைப்
பொருதிரை மருங்கோங் காவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே.

2 பாம்பணைத் துயின்றோ னயன்முதற் றேவர்
பன்னெடுங் காலநிற் காண்பான்
ஏம்பலித் திருக்க வென்னுளம் புகுந்த
வெளிமையை யென்றும்நான் மறக்கேன்
தேம்புனற் பொய்கை வாளைவாய் மடுப்பத்
தெளிதரு தேறல்பாய்ந் தொழுகும்
பூம்பணைச் சோலை யாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே.

3 கரைகட லொலியிற் றமருகத் தரையிற்
கையினிற் கட்டிய கயிற்றால்
இருதலை யொருநா வியங்கவந் தொருநா
ளிருந்திடா யெங்கள்கண் முகப்பே
விரிதிகழ் விழவின் பின்செல்வோர் பாடல்
வேட்கையின் வீழ்ந்தபோ தவிழ்ந்த
புரிசடை துளக்கு மாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே.

4 கண்ணியன் மணியின் சூழல்புக் கங்கே
கலந்துபுக் கொடுங்கினேற் கங்ஙன்
நுண்ணியை யெனினு நம்பநின் பெருமை
நுண்ணிமை யிறந்தமை யறிவன்
மண்ணியன் மரபிற் றங்கிருண் மொழுப்பின்
வண்டினம் பாடநின் றுடும்
புண்ணிய மகளி ராவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே.

5 கடுவினைப் பாசக் கடல்கடந் தைவர்
கள்ளரை மெள்ளவே துரந்துன்
அடியிணை யிரண்டு மடையுமா றடைந்தே
னருள்செய்வா யருள்செயா தொழிவாய்
நெடுநிலை மாடத் திரவிருள் கிழிக்க
நிலைவிளக் கலகில்சா லேகப்
புடைகிடந் திலங்கு மாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே.

6 செம்மனக் கிழவோ ரன்புதா வென்றுன்
சேவடி பார்த்திருந் தலச
எம்மனங் குடிகொண் டிருப்பதற் கியானு
ரென்னுடை யடிமைதா னியாதே
அம்மனங் குளிர்நாட் பலிக்கெழுந் தருள
வரிவைய ரவிழ்குழற் சுரும்பு
பொம்மென முரலு மாவண வீதிப்
பூவணங் கோயில் கொண் டாயே.

7 சொன்னவின் மறைநான் காரண முணராச்
   சூழல்புக் கொளித்தநீ யின்று
கன்னவின் மனத்தென் கண்வலைப் படுமிக்
   கருணையிற் பெரியதொன் றுளதே
மின்னவில் கனக மாளிகை வாய்தல்
   விளங்கிளம் பிறைதவழ் மாடம்
பொன்னவில் புரிசை யாவண வீதிப்
   பூவணங் கோயில் கொண் டாயே.

8 & 9 இல்லை.

10 பூவணங் கோயில் கொண்டெனை யாண்ட
   புனிதனை வனிதைபா கனைவெண்
கோவணங் கொண்டு வெண்டலை யேந்துங்
   குழகனை யழகெலா நிறைந்த
தீவணன் றன்னைச் செழுமறை தெரியுந்
   திகழ்கரு வூரனே னுரைத்த
பாவணத் தமிழ்கள் பத்தும்வல் லார்கள்
   பரமன திருவமா குவரே.

திருச்சிற்றம்பலம்

* * *



